உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி – பங்குனி – 2017 – மார்ச்  இதழ் – 57



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



| | |
|---|---|
| தனி இதழ் | ரூ 10.00 |
| ஆண்டுச் சந்தா | ரூ 100.00 |

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மலையரையன் பன்னகத்தன் மாதேவன்
மான்மழுநீ சுமந்த கையன்
மதுநதியில் ஆடுபவர் மயலறுக்கும்
மாசடைமேல் அரவு சுற்ற
மந்திரமாம் அஞ்செழுத்தை மனங்கொண்டார்
மனமிடமாய் மதிக்கும் தேவன்
கலையரசி நாவிருந்து கவிசொல்லக்
கற்றவர்கள் நெஞ்சு தேடிக்
காதலிப்பாள் நாவரசி அருகிருந்து
கந்தருவப் பண்கள் பாடக்
கண்டுருகி அருள்வழங்கு கவுமாரி
கழனிவாசல் நெல்லை அன்னை
நிலையரசு புரிகின்றாள் நித்தநித்தம்
நீங்காதாள் அடியர்க் காக
நின்றுதவு மாதேவி திரிசூலி
நிமலைபரா சக்தி என்னும்
நிர்மலப்பொன் வடிவி னாளை
நினைக்கின்ற நேசர் கூடித்
தலையாய தெய்வமெனக் கொண்டாடும்
தனிப்பெரிய கோவி லூரின்
தங்கமகள் நீயென்று தாள்வணங்கித்
தலைக்கொண்டோம் தாங்கிக் காக்கும்
தாயே என் தயவிருந்தால் என்னகுறை
தயவுவைத் தருளு வாயே

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

## ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

அண்மையில் பகத்சிங்கினுடைய நினைவுநாள் கொண்டாடப்பட்டது. இன்றைய தலைமுறையினருக்குப் பகத்சிங்கினுடைய பெயர் ஒரு வரலாற்றுக் குறியீடாக அறியப்பட்டுள்ளதே தவிர அவருடைய உணர்வுப் பூர்வமான தியாகத்தைப்பெரும்பாலானவர்கள் உணரவில்லை. இந்திய நாட்டின் சுதந்திரத்திற்காக வெள்ளையனை எதிர்த்துப் போராடிய இளைஞர் பகத்சிங். அவருடைய போராட்டங்களின் காரணமாக ஆங்கிலேயருக்கு அச்சம் உண்டாக்கியது. அவரைச் சிறையிலடைத்துத் துன்புறுத்தித் தூக்குத் தண்டனை வழங்கப்பட்டது. 20 வயதை ஒட்டிய பகத்சிங் தூக்குத் தண்டனை நிறைவேற்றப்படுகின்ற காலம்வரை தனிமைச் சிறையிலேயே இருந்தார். அந்தச் சிலநாட்களும் அவர்கலங்கியதாகவோ, வருத்தப்பட்டதாகவோ தெரியவில்லை. அவர் தன்னுடைய தியாகம் வருங்காலத்தில் பயனுள்ளதாக அமையும் என்று நம்பிக்கையோடும், மனநிறைவோடும் இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் பதிவாகியுள்ளன.

இந்த அளவிற்கு வைராக்கியத்தை அவர்களுக்கு அளித்தது எந்தச் சக்தி? அவர்நாட்டின் மேல் கொண்ட பக்திமட்டுமல்ல, நம்முடைய சமுதாயத்தின் மேல் கொண்ட அன்புமே காரணம். பழந்தமிழ் மன்னர்கள் காலத்திலே நாட்டிற்காக உயிர்துறக்க வேண்டுமென்பதை வற்புறுத்தியதாய்மார்கள் போல், இவருக்கும் நாட்டிற்காக தனது உயிரைத் தருவதிலே தயக்கமோ, வருத்தமோ இல்லை. மகிழ்வோடும், மனநிறைவோடும், மலர்ந்த முகத்தோடும் தூக்குத் தண்டனையை எதிர்கொண்டவர் என்பது வரலாறு. இப்படிப்பட்ட தியாகத்தைச் செய்வதற்கு மனத்திண்மை, அறிவு, உணர்வு, மனப்பக்குவம் அனைத்துமே காரணமாகும்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்" என்ற குறளுக்கு ஏற்பவாழ்ந்தவர் பகத்சிங்.

நம்முடைய ஆன்மீக நூல்கள், வேதம், வேதாந்த நூல்கள், நன்னெறிநூல்கள், இதிகாசம் யாவும் உணர்வுப்பூர்வமான தியாகத்தை வலியுறுத்து கின்றன. படிப்படியாக நம்முடைய உடைமைகளையும், உரிமைகளையும் நல்ல நோக்கங்களுக்காகத் தியாகம் செய்துகொண்டேவந்தால் நாம் மனத்தளவிலே நிறைவு பெற்றவர்களாக ஆவோம்.

பந்தங்களை நீக்குவதற்கு அடிப்படையான நெறிமுறைதியானமே! நல்ல நோக்கங்களையும், நல்ல செயல்களையும் நாம் கடைப்பிடிப்போமேயானால் நமக்கு நன்மையே விளைந்திடும். அப்படிப்பட்டதியாக உணர்வு உள்ளவர்களாலேயே தர்மத்திற்குப் புறம்பாக நியாயத்திற்கு எதிராக நடக்கின்ற தீயசெயல்களை எதிர்த்து நின்று போராட முடியும். அப்படிப்பட்ட உயர்ந்த மனிதர்களாலே நம்முடைய பண்பாட்டையும், பாரம்பரிய கலைச் செல்வங்களையும் காப்பாற்ற முடியும். அப்படிப்பட்ட இளையதலை முறையை உருவாக்குவோமாக.

ஆசீர்வாதங்கள்!

# ஆடல் வல்லானின் அசைவில் அறிவியல் பார்வை

*-தமிழாகரர் தெ.முருகசாமி, புதுச்சேரி*

இன்றைய தொழில் நுட்ப வளர்ச்சி மனித சமுதாயத்தைப் புதிய நாகரிக வாழ்வுக்கு இட்டுச்சென்றாலும் அதில் ஆன்மீகப் பதிவு இல்லையேல் அறிவியல் என்னும் அழகு மாளிகை இடிந்து தகர்ந்துவிடும் என்கிறார் பெட்ரன் ரசல் என்னும் தத்துவமேதை.

அறிவியல் இல்லாத ஆன்மீகம் முடம், ஆன்மீகம் இல்லாத அறிவியல் குருடு - என்பது அவர் கோட்பாடு.

இந்த அடிப்படையில் எல்லைக்கு அடங்காத இயற்கையைப் புரிந்து கொண்ட மனிதன் கண்டறிந்த அறிவியல், இயற்கையுடன் ஒத்துப் போகலாமேயன்றி அதனை அடக்கி ஆண்டுவிட முடியாதென்ற உண்மையை உணர்ந்ததன் அடையாளமாகச் சைவ சமயத்தில் கண்டறியப்பட்டதுதான் நடராசர் திருவுருவத்தத்துவம்.

அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பர். ஆம்! நடராசர் ஆடுகிறார். ஆடிக்கொண்டே இருக்கின்றார்! அவருடன் எல்லாம் ஆடுகின்றன. அந்த ஆடல் ஓர் அற்புத ஆடல், அதனால் தான் நடராசரை ஆடலரசு என்றும் ஆடல்வல்லான் என்றும் கூறுவர்.

பொதுவாக எல்லாத் தெய்வங்களும் நின்றும், இருந்தும், கிடந்துமாகக் காட்சிதர நடராசர் மட்டும் ஆடும் மூர்த்தியாகவே உள்ளார்.

அவரது ஆட்டத்தின் போது திருவடிச்சிலம்பு ஒலிக்கிறது. இடையில் கட்டிய புலித்தோல் மின்னுகிறது. மார்பில் அணிந்த பாம்புகள் நெளிகின்றன. காதில் குண்டலம் அசைகின்றது. சடாமுடியில் அணிந்துள்ள பிறை, கங்கை, கொன்றை மாலைகள் சுழல்கின்றள. இப்படிப்பாதாதி கேசமாக எல்லாம் அசைகின்றன.

ஆடுவோரைப் பொறுத்து அவருடன் எல்லாம் ஆடுவதென்பது ஓர் அறிவியலான இயற்பியல் விதியாக உள்ளது. நடராசர் ஆடும்போதுள்ள உடலசைவில் பிறவும் அசைவதை இயல்பான அசைவு எனலாம். இந்த இயல்பு அசைவின் அடுத்த நிலையில் உள்ளதுதான் எதிரொலியான ஒத்திசை அசைவு என்பதாகும்.

இந்த இருவேறு அசைவுகளுக்கு ஏற்பவே முன்னர்க் கூறிய பாதாதிகேச அசைவுக்கு மேலாகப் பல அசைவுகள் ஒத்திசை அசைவுகளை உணர்த்துவனவாக உள்ளன.

ஆடல் வல்லானின் வலக்கால் முயலகன் என்னும் அரக்கனை மிதித்த வண்ணம் உள்ளது. இடக்காலோ வலப்புறமாய்த் தூக்கியதாக உள்ளது. இவ்விரு பாதங்களின் செயல்கள் சமநிலையான ஆட்டத்திற்குத் துணை புரிவனவாக உள்ளன.

கால்களின் அசைவுடன் சமநிலையாக இருப்பதற்கேற்ப எண்டோள் வீசி நின்றாடும் பிரானின் நான்கு கைகளின் செயல்பாடுகளும் ஒத்திசை அசைவுக்கு ஒத்ததாக உள்ளன.

ஒருகை அபயம் அருள, ஒருகை தூக்கிய திருவடியைச்சுட்டிக்காட்டும், ஏனைய இருகரங்களில் ஒன்றில் நெருப்பும் மற்றதில் துடியும் ஏந்தியாடுகிறார்.

துடியும் (உடுக்கை) நெருப்பும் உலகத்தோற்றத்திற்கான மற்றும் அழிந்து துலக்கம்பெறுதற்கான குறியீடுகள். உடுக்கை - ஒலிசார்ந்தது. நெருப்பு - ஒளிசார்ந்தது. இவையில்லாமல் உலக இயக்கம் இல்லை. இவற்றைத்தான் நாதம், விந்து என்பர்.

நாதம் - ஒலி, ஒலிதான் மொழி. இந்த மொழியைச் சொற்பிரபஞ்சம் என்பர். அதாவது மொழிவளர வளர அறிவின் வளர்ச்சியால் உலக வாழ்வு மலர்ந்த வண்ணம் உள்ளதால் மொழியின் மூலமான ஒலியே உலகத் தோற்றத்திற்கான மூலம் என்பதை உடுக்யின் ஒலிப்பாடு உணர்த்திற்று. இதைத்தான் தோற்றும் துடியதனில் என்றார் மனவாசகம் கடந்தார்.

அடுத்துள்ள நெருப்பு - விளக்கத்தின் அடையாம், அதுதான் ஒளி, ஞாயிற்றின் விளக்கமும் அறிவின் விளக்கமுமே, பிரபஞ்ச வாழ்விற்கான துலக்கம் என்பதால் சுத்தமாயையாகிய விந்து, அழிக்கும் இயல்பான நெருப்பின் ஒளி வெள்ளத்தை உணர்த்தும், இதனால் ஒலியைச் சொற்பிரபஞ்சம் என்றால் ஒளியைப் பொருட் பிரபஞ்சம் என்பர், ஆக ஒலியும் ஒளியும் நடராசர் ஆட்டத்தின் ஒத்திசைவாக உள்ளன எனலாம்.

அடுத்துத் தூக்கிய திருவடியைக்கீழ் நோக்கிச்சுட்டிக் காட்டும் ஒருகை, ஓர் உண்மையை உணர்த்தும். அக்கையைக் கெஜஹஸ்தம் என்பர். தொங்கிக் கொண்டிருக்கும் யானையின் துதிக்கை என்பது பொருள்.

யானை தன் பாகனைப் பிடரியில் ஏற்றச் செய்ய, தன்காலை மண்டியிட்டு உதவும். அதுபோல் தூக்கிய திருவடியாம் குஞ்சிதபாதத்தை வணங்கினால் என்ற குறிப்பைக் காட்ட, அபயகரமானது அருளை நல்கும் என்ற குறிப்புகளோடே கெஜஹஸ்தமும் அபயகரமும் உள்ளன எனலாம்.

ஆக ஒலி, ஒளி உணர்த்தும் கைகளும் துதிக்கை, அபயக்கரம் என்ற கைகளும் ஆகிய நான்கும் இரட்டை இரட்டையாம் ஒத்திசைவுடன் செயல்படுவதால் இயற்பியலின் கோட்பாட்டிற்கு உகந்ததாக ஆன்மீக உண்மையை உணர்த்துகின்றன. இங்ஙனம் ஆடல் வல்லானின் உட்புற அசைவுகளுடன் திருவடி முதல் திருமுடி ஈறாகக் காணப்படும் அசைவுகளும் அறிவியலோடு சிந்திக்கத்தக்கதாய் உள்ளன.

பாம்பைக்கையில் பிடித்தபடி பிதுங்கிய விழிகளுடன் தவழ்ந்து விழுந்து கிடக்கும் முயலகனின் முதுகின் மீது நடராசரின் வலக்கால் அவனது எழ முயற்சிக்கும் செயலைத் தடுப்பதாக உள்ளது. இது உலகில் எங்கும் எழுந்தெழுந்து தலை தூக்கும் பாம்புகள் போல் மண்டிக்கிடக்கும் தீமைகளை ஒடுக்கும் குறிப்பை உணர்த்துவதாகும். வலக் காலையே மாறி மாறி முயலகனை மிதித்த வண்ணம் ஆடுவது ஓர் அதிசயமாகும். இந்த அசைவுக்கு இணையாகவே இடக்கால் சமநிலையில் உயர்த்தப்பட்டதாகும். இது இன்ப துன்பச் சமநிலைக்குறியீடாகும். ஆகத் திருவடிகளின் ஒத்திசைவு போலவே நடராசரின் திருமுடிப் பாங்கரிலும் நடனத்திற்கான ஒத்திசைவு உள்ளது.

நடராசரின் தலைக்கு மேலுள்ள வட்ட வடிவத் திருவாசி (பிரபை) யானது அதன் இருபக்க அடியிலும் வாய் பிளந்த மகர மீனிலிருந்து கிளம்புவதாக இருக்கும் தோற்றம், பிரபஞ்சம் முழுவதும் துன்பச் சூழல்களே இருந்தாலும் திருவாசியில் காணப்படும் சுடர்கள் -

பாலைவனத்தில் பால் வார்ப்பது போல இறைவனது அருள் உள்ளதற்கான அடையாளம் ஆகும். ஆக உலகைத் துன்பச் சுழல்கள் அசைத்தாலும் சுடர் ஒளிபோல் இறையருள் துணையிருப்பதான செயல், ஒத்திசைவைக் காட்டுவதாக உள்ளது.

இங்ஙனம் ஆடல்வல்லானின் அற்புத ஆட்டத்தின் ஒத்திசைவைக் காணவாரீர் எனக்கூறி ஆன்மாக்களை அழைக்கும் விளம்பர தாரர்களைப் போல் ஆடும் நடராசரின் சந்நிதிப்பக்கத்தில் வெளிப்புறமாய் பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாத முனிவரும் ஒத்த நிலையில் எதிர் எதிராகப் பக்திப் பிரகடனத்தைச் செய்வார்கள் போல் காட்சி அமைந்துள்ளது.

அக எந்த அசைவுக்கும் இணையானதோர் அசைவு உண்டு எனக் கூறும் இயற்பியலான அறிவியல் பார்வை ஆடல்வல்லானின் ஒட்டு மொத்த அசைவில் உணரலாம் என்பதே நடராச தரிசனமாம் எனலாம். இன்ப துன்ப ஒத்திசைவே உலக வாழ்வாம் என்க! அங்ஙனம் இயற்கையாய் இருந்ததனைத் தன் அசைவால் காட்டுகிறார் ஆடல்வல்லான்.

## நாச்சியப்ப சுவாமி மகான்

– கவித்தென்றல் கா.சு.மணியன்

இருநூறு ஆண்டு பழமையான, இனியமடம் கோவிலூர்மடம் குரு
பனிரெண்டைப் பெற்றபின்., கொழிக்கும்மடம் கோவிலூர் மடம்
ஆண்டவர் முத்துராமலிங்கம், அருணாசல ஞானதேசிகர்
வீரசேகர சாமிகள், விளங்கு புகழ் அண்ணாமலை
ஈரம்மிகு மகாதேவர், எழில் சோமசுந்தரனார்
இராமநாத ஞானதேசிகர், இனிய அரு. இராமநாத
காசிவிஸ்வநாதர் வழி கண்டெடுத்த நாச்சியப்பர்

முத்துராமலிங்க ஞானதேசிகராம், முதல் ஆண்டவர் மகன்வழி வந்த
ஆறாவது தலைமுறைப் பேரன்தான், ஆண்டவர் நம் சாச்சியப்பர்
பிறந்தது காரைக்குடி, பிள்ளையார்பட்டிக் கோயில்
சிறந்ததோர் மாணவராய்த் திகழ்ந்தது கலாஷேத்ராவில்

நொடிப்பொழுதில் மறக்காமல், ருக்மணி அருண்டேலை
அடிக்கடி நினைவு கூரும் அன்பு மனம் நாச்சியப்பர்
அச்சுக்கலை, புகைப்படம், அரியநூல் வெளியீடு
மெச்சுபுகழ் நாட்டியத்தில் மேலான புலமை பெற்றார்.

குருவாக இவர்கள் கோவிலூர் அமர்ந்த பின்பு
சிறுவர் பள்ளியினைச் சிறப்பாகத் தொடங்கினார்கள்
சிற்பக் கல்லூரி, திருமுறைக் கல்லூரி
தேர் வாகனக் கல்லூரி, சிறந்த இசைக் கல்லூரி
நாதஸ்வரம், தவில், நல் ஆபரணக் கல்லூரி
தேவஆகமப் பாடசாலை, விளங்குபுகழ் நல்
ஆலய அலங்காரக் கல்லூரி, ஆகமொத்தத்தில் கோவிலூரை
பல்கலைக் கழகமாய் மாற்றப், பாடுபட்டு வருகிறார்கள்.

இந்தியப் பண்பாட்டு இனிய ஆராய்ச்சி நிறுவனம்
சனாதன தர்மம், தனிப்பல்கலைக் கழகம் கட்ட
நானூற்றி ஐம்பது ஏக்கர், நல்லதொரு நிலம்வாங்கி
பாலாற்றங் கரையருகில் பாலக்கால் போட்டுள்ளார்.

இருநூறு ஏக்கர், ஏற்றதொரு இடம் வாங்கி
குருபீடத் தலைமையிடம் கோவிலூரில் கட்டுகிறார்
அமெரிக்க நாட்டில், அழகிய நியூஜெர்சியில்
இருபத்தி ஐந்து ஏக்கர், இடம்தனை வாங்கியங்கு
நகரவிடுதிகட்டி, நடராஜா கோயில் கட்டி
சைவ, வைணவ, சாமிகளும் வைத்திட்டு
குளமும் ஏற்படுத்தி, குடமுழுக்கு செய்வதற்கு
நாச்சியப்ப சாமிகள், நாட்டம் கொண்டுள்ளார்.

தற்போது கோவிலூரில் தங்கும் விடுதிகட்டும்
திருமண மண்டபமும், தியான மண்டபமும்
இரண்டடுக்கு மாடியிலே, ஈரெட்டுப் பதினாறு
வீடுகளும் கட்டி விளக்கேற்றி உள்ளார்கள்.

கோவிலூர் மடத்திற்கு, குறைந்தது நூறுகோடி
நகரத்தாரில் தந்தவர்கள் நாச்சியப்ப சாமிகள்தான்

பாரிவள்ளலையும், பட்டினத்தடிகளையும்,
சீர்புகழ் அப்பரையும், சிறந்த விவேகானந்தரையும்
நாயன்மார்களையும், நாம் காண இயலவில்லை
மொத்தமாய் எல்லோரின், முழு உருவமாய் இன்று
நம்மிடையே இருக்கின்றார்; நாச்சியப்ப சுவாமி மகான் - என்று

(நன்றி : ஆச்சி வந்தாச்சு)

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### ஒழுக்கம் உடைமை

*அடக்கத்தினால் அமைந்த வாழ்க்கை ஒழுங்குமுறை*

1. **ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்.**

ஒழுக்கம் - வாழ்வின் ஒழுங்கு; விழுப்பம் - பெருமை ; தரலான் - தருவதால் ; ஒழுக்கம் - அவ்வொழுங்கு; உயிரினும் - தம் உயிரைவிட ; ஓம்பப்படும் - பாதுகாக்கப்பட வேண்டும்.

வாழ்வின் ஒழுங்கு ஒருவருக்குப் பெருமை தருவதால் அந்த ஒழுங்குமுறை அவர்தம் உயிரைவிடப் பாதுகாக்கப்பட வேண்டும். உயிரைக் காக்க வாழ்வின் ஒழுங்கு முறையே வேண்டியது ஆதலின் உயிரை விட ஒழுக்கம் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது கருத்து.

2. **பரிந்து ஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்து ஓம்பித்**
**தேரினும் அஃதே துணை.**

பரிந்து ஒமபிக் காக்க - வருந்தியும் பேணிக்காக்க வேண்டும் ; ஒழுக்கம் - ஒழுங்கினை ; தெரிந்து ஓம்பித் தேரினும் - பலவற்றை ஆராய்ந்து பாதுபாத்தாலும் ; அஃதே துணை - அந்த ஒழுங்கே துணையாகும்.

பலவற்றை ஆராய்ந்து பாதுகாத்தாலும் ஒழுக்கமே வாழ்வின் துணையாகும்; எனவே அந்த ஒழுக்கத்தினை வருந்தியாவது பேணிக்காக்க வேண்டும்.

**3. ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்.**

ஒழுக்கம் உடைமை குடிமை - ஒழுக்கம் உடையவராய் இருத்தலே குடிப்பிறப்புக்குச் சிறப்பாகும் ; இழுக்கம் - ஒழுக்கத்திலிருந்து தவறுதல் ; இழிந்த பிறப்பாய் விடும் - அப்பிறப்பு இழிவாகி விடும்.

ஒழுக்கம் உடையவராய் இருத்தலே குடிப்பிறப்பிற்குச் சிறப்பாகும் ; ஒழுக்கத்திலிருந்து தவறினால் அப்பிறப்பு இழிவாகி விடும்.

**4. மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும்.**

மறப்பினும் - மறந்தாலும் ; ஓத்துக் கொளலாகும் கல்வியைப் பின்னர்ப் படித்துக்கொள்ளலாகும் : பார்ப்பான் பிறப்பு - அந்தணனின் பிறப்பு ; ஒழுக்கம் குன்றக் கெடும் - அவன் வாழ்வின் ஒழுக்கம் குறைந்தால் கெட்டு விடும்.

ஓர் அந்தணன் படித்ததை மறந்தாலும் பின்னர் படித்துக் கொள்ளலாகும் ; ஆனால் அவன் வாழ்வின் ஒழுங்குமுறை குறைந்தால் அவனது பிறப்புக் குன்றி விடும்.

**5. அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை**
**ஒழுக்கம் இலான்கண் உயர்வு.**

அழுக்காறு - பொறாமை ; உடையான்கண் - உடையவனிடத்தில் ; ஆக்கம் இல்லை - வளர்ச்சி இல்லை ; ஒழுக்கம் இலான்கண் உயர்வு - ஒழுங்கு இல்லாதவனிடம் உயர்வு இல்லை; போன்று - போல ;

பொறாமை உடையவனிடத்தில் வளர்ச்சி இல்லை ; அது போன்று ஒழுங்கு இல்லாதவனிடம் உயர்வு இல்லை.

**6. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்**
**ஏதம் படுபாக்கு அறிந்து.**

ஒழுக்கத்தின் ஒல்கார் - ஒழுங்கிலிருந்து சுருங்கமாட்டார்கள்; உரவோர் - மனவலிமை உடையவர்கள் ; இழுக்கத்தின் - ஒழுங்கிலிருந்து தவறினால் ; ஏதம் பாடுபாக்கு அறிந்து - குற்றம் உண்டாகும் நிலைமை அறிந்து.

ஒழுங்கிலிருந்து தவறினால் தமக்குக் குற்றம் உண்டாகும் நிலைமை அறிந்து மனவலிமை உடையோர் ஒழுங்கிலிருந்து சுருங்க மாட்டார்கள்.

7. ஒழுக்கத்தின் எய்தவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

ஒழுக்கத்தின் எய்துவர் - ஒழுங்குபட வாழ்தளினால் அடைவர் ; மேன்மை - மேலான நிலையை ; இழுக்கத்தின் எய்துவர் - ஒழுங்கிலிருந்து தவறுவதால் அடைவர் ; எய்தாப் பழி - இதுவரை இல்லாத பழி.

ஒழுங்குபட வாழ்வதால் ஒருவர் மேலான நிலையை அடைவார் ; அந்த ஒழுங்கிலிருந்து தவறுவதால் இதுவரை ஏற்பட்டிராத பழியினை அடைவார்.

8. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

நன்றிக்கு வித்தாகும் - நன்மைக்குக் காரணமாகும் ; நல்லொழுக்கம் - நல்ல ஒழுங்குமுறையானது ; தீயொழுக்கம் - தீய ஒழுங்குமுறைகள் ; என்றும் இடும்பை தரும்.

நல்ல ஒழுக்கம் நன்மைக்குக் காரணமாய் அமையும் ; தீய ஒழுக்கம் என்றைக்கும் துன்பத்தையே தரும்.

9. ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்.

ஒழுக்கம் உடையவர்க்கு - முறையான ஒழுங்கு உடையவர்க்கு ; ஒல்லாவே - இயலாது ; தீய வழுக்கியும் வாயால் சொலல் - மறந்தும் தவறுதலாகக் கூடத் தீய சொற்களைத் தம் வாயால் கூறுதல்.

மறந்தும் தவறுதலாகக் கூடத் தீயசொற்களைத் தம் வாயால் கூறுதல் முறையான ஒழுங்கு உடையவர்க்கு இயலாததாகும்.

10. உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்

உலகத்தோடு ஒட்ட - உலகத்தவரோடு பொருந்த ; ஒழுகல் -

ஒழுகுதலை ; பலகற்றும் - பல நூல்களைக் கற்றவராயினும் ; கல்லார் - கல்லாதவர் ; அறிவிலாதார் - அறிவில்லாதவர் ஆவார்.

பல நூல்களைக் கற்றவராயினும் உலகத்தவரோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதவர்கள் அறிவிலாதவர் ஆவார்.

## பிறனில் விழையாமை

*வாழ்க்கை ஒழுங்கினைப் பின்பற்றுபவர் பிறனுடைய இல்லாளை விரும்பாமை*

1. **பிறன்பொருளாள்பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்**

பிறன்பொருளாள் - பிறனுடைய பொருளானவள் ; பெட்டு - விரும்பி ; ஒழுகும் பேதைமை - வாழும் அறியாமை ; ஞாலத்து - இந்த உலகத்தில் ; அறம்பொருள் கண்டார்கண் இல் - அறத்தையும் பொருள் நிலையினையும் அறிந்தவர்களிடத்தில் இல்லை.

அறத்தையும், பொருள் நிலையினையும் அறிந்து வாழ்பவர்களிடத்தில் பிறனுடைய பொருளாம் மனைவியை விரும்பி வாழ்தலாகிய அறியாமை இல்லை.

2. **அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல்**

அறன்கடை நின்றாருள் எல்லாம் - அறனில்லாத வழிகளில் வாழ்பவர்கள் எல்லோருள்ளும் ; பிறன்கடை நின்றாரின் - பிறன்மனைவி வாயிலில் நிற்பாரைப் போல ; பேதையார் இல் - அறிவில்லாதவர் இல்லை.

அறனில்லாத வழிகளில் வாழ்பவர்கள் எல்லோருள்ளும் பிறன் மனைவியின் வாயிலில் நிற்பவரைப் போல அறிவிலாதவர் இல்லை.

3. **விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார்இல்
தீமை புரிந்து ஒழுகு வார்.**

விளிந்தாரின் வேறல்லர் மன்ற - இறந்தவராவாரேதவிர உயிர் உள்ளவர் அல்லர் ; தெளிந்தார் இல் - தம்மை அறிந்தவரின் இல்லாள்; தீமை புரிந்து ஒழுகு வார் - தீங்கு செய்து வாழ்கின்றவர்.

தம்மை அறிந்தவரின் இல்லாளை விரும்பித் தீங்கு செய்து வாழ்கின்றவர் உயிர் உள்ளவரே ஆனாலும் இறந்தவராவார்.

**4. எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறன்இல் புகல்.**

எனைத்துணையர் ஆயினும் என்னாம் - எத்துணைப் பெருமை உடையராய் ஆனாலும் என்ன? ; தினைத்துணையும் தேரான் - தினை அளவும் பிழையைச் சிந்தித்துப் பாராதவன் ; பிறன்இல் புகல் - பிறன்மனையாளை விரும்பிச் செல்லுதல் ;

பிறன்மனையாளை விரும்பிச் செல்லுதலாகிய பிழையினைத் தினை அளவும் சிந்தித்துப் பாராதவன் எத்துணைப் பெருமையுடையவனாய் இருந்தாலும் என்ன? பெருமை இல்லை.

**5. எளிதுஎன இல்இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.**

எளிதுஎன - பிறன்மனையாளை அடைதல் எளிது என்று கருதி ; இல்இறப்பான் - பிறன் இல்லின்கண் செல்பவன் ; எய்தும் - அடைவான் ; எஞ்ஞான்றும் நிற்கும் பழி ; என்றும் நிலைத்து நிற்கும் பழி - விளியாது - அழியாமல்.

பிறன்மனையாளை அடைதல் எளிது என்று கருதிப் பிறன் இல்லின்கண் செல்பவன் என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும் பழியினை அடைவான்.

**6. பகைபாவம் அச்சம்பழிஎன நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண்.**

இல்இறப்பான் கண் - பிறனில்லை விரும்பிச் செல்வானிடத்து ; பகைபாவம் அச்சம் பழி என நான்கும் - பகைமை, பாவம், அச்சம், குடிப்பழி என்ற நான்கு குற்றமும் ; இகவாவாம் - நீங்காமாட்டா.

பிறனில்லை விரும்பிச் செல்பவனிடத்தில் பகைமை, பாவம், அச்சம், குடிப்பழி என்ற நான்கு குற்றங்களும் நீங்கமாட்டா.

7. அறன்இயலான் இல்வாழ்வான் என்பான் பிறன்இயலாள்
பெண்மை நயவாத வன்.

அறன்இயலான் - அறநிலையில் ; இல்வாழ்வான் என்பான் - இல்லற வாழ்க்கையை வாழ்கின்றவன் என்று கருதப்படுபவன் ; பிறன் இயலாள் பெண்மை - பிறன் இயல்பான மனையாளின் பெண்மையை ; நயவாதவன் - விரும்பாதவன்.

பிறனுக்கு இயல்பாக அமைந்த மனையாளின் பெண்மையை விரும்பாதவனே அறநிலையில் இல்லற வாழக்கையை வாழ்கின்றவன் என்று கருதப்படுபவன் ஆவான்.

8. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு.

பிறன்மனை நோக்காத பேராண்மை - பிறனுடைய மனையாளை விரும்பி நோக்காத பெரிய ஆண்தகைமை ; சான்றோர்க்கு - உயர்ந்தோர்க்கு ; அறன்ஒன்றோ - அறம் ஒன்றுதானா ; ஆன்ற ஒழுக்கு - அதுவே சிறந்த ஒழுக்கமும் ஆகும்.

பிறனுடைய மனையாளை விரும்பி நோக்காத பெரிய ஆண்தகைமை உயர்ந்தோர்க்கு அறம் ஒன்று மட்டும் அன்று ; சிறந்த ஒழுக்கமும் ஆகும்.

9. நலக்குரியார் யார்எனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

நலக்குரியார் - நன்மைகளுக்கெல்லாம் உரியவர் ; யார்எனின் - யார் என்றால் ; நாமநீர் வைப்பின் - அச்சம் தரும் கடல் சூழ்ந்த உலகத்தில் ; பிறற்குரியாள் தோள் - பிறனுக்குரிய மனையாளின் தோள் ; தோயாதார் - சேராதவர்.

நன்மைகளுக்கெல்லாம் உரியவர்யார் என்றால் அச்சம் தரும் கடல் சூழ்ந்த உலகத்தில் பிறனுடைய மனையாளின் தோள்களைச் சேராதவரே ஆவர்.

10. **அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று.**

அறன்வரையான் - அறம் கருதாமல் ; அல்ல செயினும் - தீயனவற்றைச் செய்தாலும் ; பிறன் வரையாள் - பிறனுடைய மனையாள் ; பெண்மை நயவாமை நன்று - பெண்மையை விரும்பாமல் இருத்தலே நன்று.

அறம் கருதாமல் புறம்பான தீய செயல்களைச் செய்தாலும் பிறனுடைய மனையாளின் பெண்மையை விரும்பாதிருத்தலே நன்றாகும்.

*தொடரும்...*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 5

**தமிழாகரர் தெ. முருகசாமி**
**(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)**

கோயில் நான் மணி மாலையின் 10ஆம் பாடலில் பிரம்மாவும் திருமாலும் தேடிக் காணமுடியாத சிவன், தான் தேடாத போது வந்து தன் உள்ளத்தில் நடனமாடிய அதிசயத்தைக் கூறிய பட்டினத்தார் 12ஆம் பாடலில் அதே கருத்தை ஒருசிறு வேற்றுமையுடன் குறிக்கின்றார் என்பதை இக்கட்டுரையில் காண்போமாக!

12ஆம் பாடலின் தொடக்கத்தில் திருமால், பிரம்மாக்களின் உயர்ச்சிகளைக் கூறி இத்தகையோர்களால் காணமுடியாத சிவன், திருமுடியுடன் கூடிய திருவடிகளால் நடனமாடி என் நெஞ்சைத் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளான் என அதிசயப்படுகிறார் பட்டினத்தார்.

இங்ஙனம் கூறக் காரணம் யாதெனில் அன்பின்றி அறிவுச் செருக்காலும் அதிகார போதையாலும் யாதொன்றையும் சாதிக்க முடியாதென்ற உண்மையை உணர்த்தவேயாம் எனலாம். தானே பெரியவன் எனப் பிரம்மாவும் திருமாலும் அதிகாரப் போட்டியால் அறிவிழந்ததால் சிவனது திருமுடி திருவடிகளைக் காணாதவராயினர்.

இப்படி ஆசாபாசம் நிறைந்தவர்க்குக் காட்டாத காட்சியை, பொய், அச்சம், மாயாமல ஆசை, முதலியவற்றிற்கு இருப்பிடமான நெஞ்சமானது இவை நீங்காமல் உள்ளனவே என அன்பால் ஏங்கும் நெஞ்சில் ஈசன் குடிகொண்டதாகப் பட்டினத்தார் குறிக்கிறார்.

*கல்லினும் வலிது நல்லிதிற் செல்லாது*
*தான்சிறி தாயினும் உள்ளிடை நிரம்ப*
*வான்பொய் அச்சம் மாயா ஆசை*
*மிடைந்தன கிடப்ப, இடம்பெறல் அருமையில்*
*ஐவர் கள்வர் வல்லிதிற் புகுந்து*
*மண்மகன் திகிரியில் எண்மடங்கு சுழற்ற*
*ஆடுபு கிடந்த பீடில் நெஞ்சத்து*
*நுழைந்தனை புகுந்து;*

இதில் தன் மனத்தின் பொல்லா நிலைகளுக்காக ஏங்குகிறார் பட்டினத்தார் எனத் தெளிவாகிறது. கல் போன்ற வலியது என்றதால் இளகிய தன்மை இல்லாத பொல்லா மனம் என்கிறார். நல்லதையே சிந்திக்காது; தீய பலகுணங்கள் மண்டிய இடம்; ஐம்புலச் சேட்டைகளால் அலைப்புறும்; அது எப்படி எனில் மண்பாண்டக் குயவனின் தண்ட சக்கரம் போல் உலகியலில் அலைப்புண்டு சுழலுமாம். இத்தகு தீயவற்றின் கொள்கலனாயுள்ள நெஞ்சில் இறைவன் வருவானா! என உண்மையில் அன்பால் ஏங்கும்போது அங்கே காட்சி தருவான் என்கிறார் பட்டினத்தார்.

அந்த விதமாகத் தன்னுள் வந்து தங்கிய சிவனைப்பற்றிக் கூறுகையில் அமரர்க்கு அமிர்துணா அளித்த கடவுள் என்கிறார். திருப்பாற் கடல் கடைந்த போது கண்ட அமிர்தத்தைத் தேவர்கட்கு அளித்தவர் சிவன். மிர்து - என்றால் உறவு. அ-எதிர்மறை உணர்த்தும் எழுத்து. பிறப்பாகிய உறவை நீக்குவதுதான் அமிர்தமாகும். இத்தகு அமிர்தம் அளித்தவர் தன்நெஞ்சில் நடனமாடுவதைப் பற்றிக் கூறுகையில்,

*தழைந்த சடை, செய்யவாய், மையமர் கண்டம்*
*நெற்றியில் நாட்டம், எடுத்த பாதம், தடுத்த*
*செங்கை, புள்ளி ஆடை*
*ஒள்ளிதின் விளங்க நாடகம் ஆடுதி*

எனப் பட்டினத்தார் பகர்ந்தார்.

சிவனது அசைவில் எல்லாம் அசைகின்றன. இவ் அசைவு ஓர் அறிவியல் பார்வையானதாகும். எந்த ஓர் வினைக்கும் எதிர் வினை உண்டு என்பது இயற்பியலான (Physics) அறிவியல் கோட்பாடாகும். அதன்படி அவனன்றி ஓரணுவும் அசையா என்ற உணர்வில் அவன் ஆட அவனுடன் எல்லாம் ஆடுகின்றன. இத்தகு ஆட்டத்துள் பட்டினத்தார் உணர்த்தும் எடுத்த பாதமும் தடுத்த செங்கையும் பற்றிய அசைவே இன்றியமையாத ஒன்றை உணர்த்துகின்றது.

தூக்கிய திருவடிதான் எடுத்தபாதம், தடுத்த செங்கை என்பது தூக்கிய திருவடியை வணங்க வேண்டும் எனச் சுட்டிக் காட்டும் கெஜஹஸ்தமாகும். கெஜம் - யானை, ஹஸ்தம் - கை, இந்த கெஜஹஸ்தமானது ஆடல் வல்லானின் இடது தோளிலிருந்து நீண்டு வலப் புறமாய் தூக்கிய திருவடியை யானையின் துதிக்கை போல் வளைந்ததாகச் சுட்டிக் காட்டுவதாகும்.

எடுத்த பாதத்தைக் காட்டும் தடுத்த செங்கையின் குறிப்பானது ஓர் அசைவுக் கேற்ற இணை அசைவு எனலாம்.

யானை தன் பாகனைத் தன் முதுகில் ஏறச் செய்யத் தன் முன்னங்காலை மண்டியிட்டுக்காட்டிப் பாகனைப் பிடரியில் ஏற்ற உதவும். பாகனும் மிக எளிதாக யானைமீதேறுவான், அதுபோலத் தூக்கி உயர்த்திய திருவடியை வணங்கினால் வணங்கும் ஆன்மாவை உயர்த்துவான் என்பதுதான் எடுத்தபாதத்துடன் கூடிய தடுத்த செங்கைக் காட்சியாகும்.

தடுத்த என்பது ஆன்மாவின் வேகம் தடுத்தாண்டதன் குறிப்பாகும். அதாவது ஆன்மாவை எடுத்தாளுதற்கான பரோபகாரமாகும். ஆக, பட்டினத்தார், கோயில் மணி மாலையின் 12ஆம் பாடலில் தில்லைக் கூத்தனின் ஆன்மீக அற்புதத்தை அறிவியல் பார்வையில் பார்த்துணர்த்தினார் எனலாம்.

மேற்படியான கருத்துக்குத் தொடர்புடையதாகவே 13ஆம் பாடலில் பட்டினத்தார், மொழி தெரிய, வாயினால் இப்போதே மன்றில் நடமாடும் நாயனார் என்றுரைப் போம் நாம் - என மக்களை வேண்டுகிறார், வாழ்க்கை நிலையில்லாதது என்பதால் இப்போதே சென்று மன்றில் நடம்புரியும் நடராசரைக்காண வேண்டும் என விரைவு படுத்துகிறார்.

இப்போதே என்பது உடம்பு நல்லநிலையாக இருக்கும் போதே என்பது கருத்து; ஏனெனில் அகலவை இருபதுவரைதான் இன்பம், அதற்குமேல் உடலின் வளர்ச்சி குன்றும்; முப்பதில் அழகு அகலும், நாற்பதில் அறிவு திரியும்; ஐம்பதில் வலி குன்றும், அறுபதில் தாதுச்சத்துக் குறையும். எழுபதில் கண்பார்வை கெடும். எண்பதில் செவிப்புலன் கேளா. தொண்ணூறில் மனம்கெடும், நூறில் உயிர் நீங்கும்; இப்பொதுவான கருத்தின்படி உடல் நலம் உள்ளபோதேதில்லை சென்று காணப் பட்டினத்தார் அறிவுரை கூறுகிறார்.

அடுத்துப் பட்டினத்தார் லௌகிக நிலையில் மக்கள் உழன்றுதிரிவதற்காக வருந்துவதாகத் தில்லை யீசனிடம் முறையிடுவதாக 15ஆம் பாடலைப் பாடுகிறார். பெண்ணின் விருப்பத்தால் அவர்களை வருணித்தே காலம் கழிக்கும் மாந்தர்களால் என்ன பயன்? தானும் கெட்டுப் பிறரையும் கெடுக்காமல் சிவகதி அருளும் தில்லை ஈசனை வழிபட்டு அருச்சித்தால் நல்லருல் கிட்டும் என்கிறார்.

காம இச்சையால் வாழும் தீயோரால் என்செய முடியும்? என்றும், அதுவே அவர்தம் வாழ்வானால் நரகுஉறுவர் என்றும் எச்சரிக்கின்றார் பட்டினத்தார்.

முற்றுந் துறந்தவரான பட்டினத்தார் மரக்கலம் ஏறிக் கடல்வாணிபத்தில் ஈடுபட்டவராதலால் அந்த அனுபவத்தை மனிதவாழ்வோடே பொருத்திப் பார்த்து மரக்கல வாணிபத்தின் ஊதியமாகத் தில்லையம்பலத் திருவருள் பெற ஆன்மாக்களுக்கு அறிவுரை கூறுவதாகப் பதினாறாம் பாடலைப் பாடியுள்ளார்.

அறிவில்லா ஒழுக்கம், பொய், நோய் போன்ற துன்பத்தொகுதிகளான சரக்கை ஏற்றிய உடம்பு என்னும் மரக்கலம், வினைக் கோட்பாடாகிய ஊழ் என்னும் கப்பலோட்டியால் செலுத்தப்படும் போது பல பிறவி எடுத்தலாகிய துறைதோறும் சென்று சேரும்; அப்போது ஐம் புலமுதலைகள் அச்சுறுத்தும். குடும்பம் என்னும் பாறைமோத மனம் என்னும் கூம்பு முரிந்து உணர்வு என்னும் பாய்கிழிந்து மரக்கலமாம் உடம்பு நிலை கலங்கிக்கவிழா முன்னம்

தில்லைக்கரசனேஸ நின்திருவருள் என்னும் கயிறுபூட்டி, நின்திருவடியாம் கரையில் என்னைச் சேர்ப்பாய் - என வேண்டுகிறார்.

இவ்வுடம்பு வீழ்வதற்குள் உயிர் - உன்திரு வடியை அடைதலாகிய சிவன்முத்திப் பேற்றை அருள வேண்டும் என்கிறார் பட்டினத்தார்.

தமிழிலக்கணப்படி இப்பாடல் முழுவதும் உருவகமாகவே அமையப் பாடப்பட்டதால் இது முற்றுருவகப் பாடலாகும், பட்டினத்தார் பாடற்பொருளுக்கு முதன்மை கொடுத்துதுபோலவே பாடும் இலக்கண முறைமைக்கும் தக்க இடம் கொடுத்ததால் அவரின் பைந்தமிழ்ச் சுவை தனித்துவம் உடையது எனலாம்.

# மடாலய நிகழ்வுகள்

## கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி விளையாட்டு விழா

22.2.2017,23.02.2017 ஆகிய நாள்களில் கோவிலூரில் உள்ள கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி விளையாட்டு விழா கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் தலைமையில் நடைபெற்றது. பி.பி.எட் 2ஆம் ஆண்டு மாணவி பானுப்பிரியா வரவேற்புரை நிகழ்த்தினார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசி வழங்கினார். அழகப்பா பல்கலைக்கழகத் தேர்வுக் கட்டுப்பாட்டு அலுவலர் டாக்டர். குருமல்லேஸ் பிரபு அணிவகுப்பு மரியாதையை ஏற்று விளையாட்டுப் போட்டிகளைத் துவக்கி வைத்தார். தேவகோட்டை ஆனந்தா கலை அறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர். ஜான்வசந்தகுமார் மற்றும் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் போட்டிகளில் வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர். இரண்டாம் ஆண்டு எம்பி.எட். மாணவி அமலாஷாலினி விளையாட்டுப் போட்டிகளின் ஆண்டறிக்கையை வாசித்தார். பனிமொழி எம்.பி.எட். இரண்டாம் ஆண்டு மாணவி நன்றி கூறினார். தமிழ்நாடு உடற்கல்வியியல் மற்றும் விளையாட்டுப் பல்கலைக்கழக அளவிலான விளையாட்டுப் போட்டிகளில் 10000 மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் முதலிடம் பெற்ற

மாணவர் பட்டாணியைப் பாராட்டிக் கோவிலூர் ஆதீனம் 1000 ரூபாய் ரொக்கப்பரிசு வழங்கிப் பாராட்டினார். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, மாயாண்டி, திருமதி மணிமொழிமோகன், திருமதி மணிமொழிமுருகன் மற்றும் பலர் நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். விளையாட்டுப் போட்டிகளைப் பேராசிரியர்கள் சாத்தாகுட்டி, சரவணன், ஆனந்தராஜ், புகழேந்தி, விமலாதேவி, ரஞ்சித் ஆகியோர் நடத்தினர்.

**கோவிலூர் பாலிடெக்னிக் கல்லூரி இரத்ததான முகாம்**

1.3.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி நாட்டு நலப்பணித்திட்டம் சார்பில் காரைக்குடி அரசு மருத்துவமனை இரத்த வங்கியுடன் இணைந்து இரத்ததான முகாம் நடைபெற்றது. கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்புரை ஆற்றினார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசிஉரை வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் இரத்த வகைகள் மற்றும் உடலில் இரத்தம் உற்பத்தியாவது குறித்து விளக்கம் அளித்தார். காரைக்குடி அரசு மருத்துவமனை இரத்த வங்கி அலுவலர் டாக்டர் செல்லமுத்து இரத்ததானம் பற்றியும் இரத்ததானம் செய்வதற்கான தகுதிகள் பற்றியும் கூறினார். நாட்டு நலப்பணித்திட்ட அலுவலர் கருப்பையா நன்றி கூறினார். பேரா.திலகவதி நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். 75 மாணவர்கள் இரத்தம் வழங்கினர். அரசு மருத்துவர் கண்ணுசாமி கார்த்திகேயன் உடற்கல்வி இயக்குநர் சசிகுமார் இரத்ததான நிகழ்வை ஒருங்கிணைத்து நடத்தினர். மடாலய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். ரவீந்திரன், டாக்டர். செல்லப்பா, மணிமொழிமோகன், மணிமொழி முருகன் பங்குபெற்றனர்.

**கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி பத்தாம் ஆண்டுவிழா மற்றும் உள்விளையாட்டு அரங்கம் திறப்பு**

10.3.2017 அன்று கோவிலூர் மடாலயத்தின் சனாதனதர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலையால் நடத்தப்பெற்று வரும் கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியின் பத்தாண்டு நிறைவு

விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. கல்லூரியின் பத்தாண்டு நிறைவை நினைவுகூறும் வகையில் கட்டப்பெற்ற உள்விளையாட்டு அரங்கினைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் திறந்து வைத்தார். உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் அறிக்கை வாசித்தார். அமராவதிபுதூர் சாரதா நிகேதன் மகளிர் கல்லூரி முதல்வர் டாக்டர். செல்வராணி சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு உரையாற்றிப் பல்வேறு போட்டிகளில் வென்றவர்களுக்கும் முதல் மதிப்பெண் பெற்ற மாணவ மாணவியருக்கும் பரிசுகளை வழங்கினார். மேலும் மடாலய நிறுவனங்களில் பத்தாண்டுகளுக்கு மேலாகப் பணிபுரிந்த அலுவலர்கள் ஆசிரியர்கள் பாராட்டப் பெற்றனர். இவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து, நினைவுப் பரிசினை மடாலய டிரஸ்டி நா.நாராயணன் வழங்கிப் பாராட்டிப் பேசினார். மாணவர்களின் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன. கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன், கல்லூரி முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, டாக்டர். ரவீந்திரன், மாயாண்டி, பள்ளி முதல்வர்கள் திருமதி. மணிமொழிமோகன், திருமதி. மணிமொழிமுருகள் மற்றும் மடாலய அலுவலர்கள் ஆசிரியர்கள் பெற்றோர்கள் பெருமளவில் பங்குபெற்றனர்.

## கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் நான்காம் ஆண்டு கல்லூரி நாள் விழா

கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் நான்காம் ஆண்டு கல்லூரி நாள் விழா 04.03.2017 அன்று சிறப்பாக நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் சீர் வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார்கள், பேரா. சீதாலெட்சுமி வரவேற்புரை நிகழ்த்தினார். கல்லூரி முதல்வர் டாக்டர்.பா. செல்லப்பா ஆண்டறிக்கை வாசித்தார். அழகப்பா பல்கலைக்கழகத் தொலைதூரக் கல்வியின் இயக்குநர் முனைவர் சிவக்குமார் மாணவர்களுக்குச் சிறப்புரையாற்றிப் பரிசுகள் வழங்கினார். முனைவர். கலா நன்றியுரை கூறினார். மாணவர்களின் கலை நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன. ஊடகவியல் துறை

தயாரித்த குறும்படங்கள் திரையிடப்பெற்றன. பேரா. செளமியா மற்றும் பேரா.திருநெல்லை நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார்கள். கோவிலூர் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன், கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் திரு.மாயாண்டி, திருமதி. மணிமொழி மோகன், திருமதி. மணிமொழி முருகன், பேராசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் மற்றும் பெற்றோர்கள் திரளாகக் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

**25.02.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் பேராசிரியர் முத்தழகு கணேசன் சாக்கிய நாயனார் மற்றும் சிறப்புலி நாயனார் குறித்துப் பேசினார்.**

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### மலையத்துவசனை அழைத்தது

சுந்தரபாண்டியப் பெருமான் தேவியாரோடு வந்து எழு கடலும் நிறைந்த திருக்குளத்தின் அருகே நந்தவனத்திலே சிங்காதனத்திலே எழுந்தருளினார். பின்னர் தமது தேவியாரை நோக்கி, யாம் உனக்காகவே எழு கடல்களையும் இந்த நகரத்திலே வருமாறு அழைத்தோம். இதிலே வந்து கடலாட உன் அன்னையை அழைப்பாயாக ! என்று திருவாய் மலர்ந்தருளினார். அதன்படிக்கே தடாதகைப் பிராட்டியாரும் தன் தாயாம் காஞ்சனமாலையை அழைத்துக்கொண்டு எழு கடல் திருக்குளக் கரைக்கு வந்தருளினார்.

காஞ்சனமாலை அப்போது சிவயோகியர்களைப் பார்த்து, கடலில் நீராடுவதற்குரிய விதி யாது? சொல்லுங்கள் எனக் கேட்டாள். சிவயோகியர், கற்பிற்சிறந்த காஞ்சனையாரே ! கணவனது கை, குமாரனது கை, பசுக்கன்றின் வால் இவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பிடித்துக்கொண்டு நீராடுதலே முறை என்று செப்பினர். அது கேட்ட காஞ்சனை, அந்தோ ! எனக்குக் கணவனோ, புத்திரனோ இல்லையே எனக்குக் கிடைக்கக் கூடியது கன்றின் வால்தான் போலும் என்று தன் மகளை நோக்கி வருந்திப் புலம்பினார். தடாதகை தேவியார் உடனே

தலைவர் சிவபெருமான் முன்னால் சென்று வணங்கித் தன் அன்னையின் குறையை வெளிப்படுத்தி விண்ணப்பித்தாள். சுந்தரப்பெருமான் அப்போது இந்திரனோடு ஒன்று சேர்ந்து தேவலோகத்திலே அமர்ந்திருந்த மலயத்துவச பாண்டியனைத் திருவுளம் கொண்டார். மலயத்துவச பாண்டியன் சிவபெருமானது திருவுளத்திறத்தால் இந்திரலோகத்தை விடுத்துத் தெய்வ விமானம் ஒன்றிலே ஏறிக்கொண்டு மதுரையில் உள்ள எழுகடல் தடாகத்தருகே வந்து சேர்ந்தான். யான் பெண்மகவு பெற்றதனால் அடைந்த பேறு இது என்று சொன்னான் பாண்டியன். சுந்தர பாண்டியப் பெருமானை வணங்கச் சென்றான்; தன் மாமனாகி விட்டபடியால் பெருமான் தடுத்துவிட்டார்.

சுந்தரப்பெருமான் அன்புள்ளங்கொண்டு மலயத்துவசனை அருளுடன் நோக்கி, மனைவியுடன் சென்று தீர்த்தம் ஆடுவாயாக என்று இயம்பினார். தன் மகளைக் கண்ட பாண்டியன் பெருமகிழ்வு கொண்டான். கணவனை நேரே கண்ட காஞ்சனமாலை நாணங்கொண்டு வணங்கினாள். பின்பு தனது விரலிலே பரிசுத்தத்தின் பொருட்டு பவித்திரம் அணிந்து பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து மறையவர் கூறிய விதிப்படி தன் கணவன் கரத்தைப் பற்றிக்கொண்டு மிகுந்த சந்தோஷத்தோடு எழுகடலில் நீராடினாள்.

காஞ்சனமாலையும் மலையத்துவசனும் புண்ணிய தீர்த்தம் ஆடிக் கரை யேறியதும் சோமசுந்தரப் பெருமானின் திருவருளாலே பாசம் விலக உமையொரு பாகத்தரது அருள்வடிவத்தை அடைந்தனர். ஒளி தெறிக்கும் திருநீலகண்டமும், நான்கு கரங்களும், நெற்றிக்கண்ணும் கொண்ட சிவசொரூபத்தை உலகோர் கண்டுவியந்தனர். அது சமயம் சிவலோகத்திலிருந்து தேஜோ மயமான தெய்வ விமானம் வந்து இறங்கியது. சுந்தரப்பாண்டியப் பெருமானின் ஆணையால் இருவரும் எல்லாத் தெய்வங்களும் வணங்க விமானத்தில் ஏறினர். தேவர்கள் பூமாலை பெய்தனர். தூமறைகளும், துந்துபிகளும் முழங்க. திவ்ய விமானம் மேலே எழுந்தது. ஹர ஹர கோஷம் எங்கும் பரவியது.

முனிபுங்கவர் வாழ்த்த, தேவர்கள் துதிக்க விமானம் சிவலோகத்தை நோக்கிச் சென்றது. சுந்தரபாண்டிரும் தடாதகைப் பிராட்டியாரும் அரண்மனை திரும்பினர். அங்கு அறக்கொடியான பிராட்டியார் தன் தலைவன் திருப்பாதங்களை வணங்கி, தேவப்பொருளாகிய சிவபெருமான் தனது ரூபத்தையே தனது பெற்றோர்கட்கு அளித்தருளிய பெருங்கருணையை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்தார். எனது தாய் நீராட அழைத்தருளினீர். ஸ்நானம் செய்து எழுந்ததும் அவர்கட்குத் தேவரீரது சொரூபத்தையே ஈந்தருளினீர். பாண்டிய வம்சம் நின்றுவிட்டது என்ற பழி ஏற்படாதவாறு செங்கோல் செலுத்தி வருகின்றீர். இந்த நிலைமைக்கு இடையூறு ஒன்றும் இனி ஏற்படாதே? என விண்ணப்பித்துக் கொண்டார்.

---

## சுவாமிகளை வணங்குகிறோம்!

செய்ய தமிழும் திருத்தொண்டும்

சேரப் பெருமை மேலோங்கும்

மெய்யைப் பெயரில் தாங்கியநல்

மேன்மை மிக்க சுவாமிகளின்

செய்ய தாமரைப் பாதங்களைச்

சேர்ந்தே வணங்கி நிற்கின்றோம்!

எய்தும் எழுபத்(து) ஐந்தாண்டில்

எமக்கே இன்னருள் வழங்கிடவே!